# இயலிசை

தனிப்பிரதி விலை 0-50 காசுகள்

| | | |
|---|---|---|
| ஆண்டு சந்தா | ரூ. | 10 |
| அரையாண்டு சந்தா | ரூ. | 5 |

சிறப்பாசிரியர்:
சிதம்பரம் S. மீனாட்சிசுந்தரம்

துணை ஆசிரியர்:
K. P. இளங்கோவன்

"இயலிசை"
57, தெற்கு சிவன் கோவில் தெரு,
கோடம்பாக்கம் சென்னை-24.

மலர் 3 | 1-8-84 | இசைக்கலை தமிழ் மாதமிருமுறை | ஆடி இதழ் | இதழ் 7-8

## சென்னையில் அருணகிரிநாதர் விழாக்கள்



வருடந்தோறும் ஆகஸ்டு 15 சுதந்திர தினத்தன்று அருணகிரி நாதர் அவதரித்த திருவண்ணாமலையில் திருப்புகழ் விழாவினைச் சிறப்பாகக் கொண்டாடுகின்றனர். இதனையொட்டி சென்னையில் வடபழநி ஆண்டவர் திருக்கோவிலில் திருப்புகழ் விழாவினை பல வருடங்களாக வடபழநி திருப்புகழ் சபையினர் நடத்தி வருகின்றனர். இவ்வருடமும் ஆகஸ்டு 14, 15, 16 ஆகிய தினங்களில் இவ்விழாவினை நடத்துகின்றனர். 14ந் தேதி மாலை அருணகிரிநாதர்பட ஊர்வலம் மங்கள இசை திருப்புகழ் பஜனையும் நடைபெறும். இரண்டு நாட்களிலும் பல பிரபல இசை வாணர்கள் தொடர் திருப்புகழிசை அரங்கம் திருக்கோவில் மண்டபத்தில் நடைபெறும்.

சென்னை சூளை ஓம் கங்கை விநாயகர் திருமண மண்டபத்திலும் 15ந் தேதி காலை முதல் மாலை வரை திருப்புகழ் இசையரங்கம் நடைபெறுகின்றது இதனை மூர் அங்காடி ஓம் கங்கை விநாயகர் அருள் நெறித்திருக் கூட்டம் நடத்துகிறது.

---

### இசைமணியார் மகன்

## சீர்காழி S. G. சிவசிதம்பரம் திருமணம்

பிரபல பாடகர் டாக்டர் சீர்காழி கோவிந்தராசன் மகன் டாக்டர் S G சிவசிதம்பரம் எம். பி. பி எஸ் (எம்.டி) இவரும் நல்ல பாடகராவார். வானொலி, டி.வி, இசைத்தட்டுகளில் பாடியுள்ளார். 'மிருதங்க சக்ரவர்த்தி' உட்பட சில திரைப்படங்களில் பாடியவர். இவருக்கும் மதுரை வி. கே. கல்யாணசுந்தரம் அவர்களின் செலவி சாந்தி மீனாட்சிக்கும் 17-8-84 அன்று சென்னை மயிலை ஏ. வி. எம். இராஜ இராஜேசுவரி திருமண மண்டபத்தில் திருமணம் நடைபெற உள்ளது.

முதல் நாள் 16-8-84 மாலை பெண் அழைப்பு மயிலை நவசக்தி விநாயகர் ஆலயத்திலிருந்து நடைபெறும். அதற்கு எ. கே. சி. நடராசன் குழுவினர் கிளாரிநெட் வாசிக்கின்றனர். இரவு மண்டபத்தில் கலைக்காவலர் டி. வி. இராமானுஜனார் தலைமையில திருமுருக கிருபானந்த வாரியார் வாழ்த்துரை வழங்குகின்றார்.

காலை மணவிழாவிற்கு மதுரை எம். பி. என். சகோதரர்கள் நாதசுரம் வாசிக்கின்றனர். அரித்துவார மங்கலம் எ ஆர். பழனிவேல், திருவாளப் புத்தூர் டி. எ, கலியமூர்த்தி ஆகியோர் தவில் வாசிக்கின்றனர். மாலை வரவேற்புக்கு பி. கிருஷ்ணமூர்த்தி குழுவினர், கே. ஜே. ஜேசுதாஸ் குழுவினர் இன்னிசை நிகழ்ச்சிகள் நடைபெறும்.

22-8-84 அன்று மாலை மதுரையில் வரவேற்பு நடைபெற உள்ளது. திருவாரூர் டி. எஸ், ராஜரத்தினம் பிள்ளை நாதசுரம் வாசிக்கின்றார். இரவு எம். எஸ். விசுவநாதன் குழுவினர் மெலலிசை வழங்குகின்றனர். அதில் டி. எம். சௌந்தரராசன், எஸ். பி. பாலசுப்ரமணியம், பி. சுசிலா, சசிரேகா ஆகியோர் கலந்து பாட உள்ளனர்.

## புது அரசவைக் கலைஞர்கள் தமிழக அரசு நியமனம்

சிறந்த இசைக்கலைஞர்களை தேர்ந்தெடுத்து தமிழக அரசவைக் கலைஞர்களாக நியமித்து அவர்களுக்கு மாதம் ரூ 1000 தமிழக அரசு வழங்கி வருவது கலை உலகம் அறிந்ததே. இதுவரை அவ்வாறு கீழ்க்கண்ட 20 கலைஞர்களை தமிழக அரசு நியமனம் செய்துள்ளது.

| | |
|---|---|
| நாமகிரிப்பேட்டை கிருஷ்ணன் | நாதசுரம் |
| மதுரை M. P. N சேதுராமன் M. P. N. பொன்னுசாமி | ,, |
| திருச்சி A K C. நடராசன் | கிளாரினட் |
| வலங்கைமான் A சண்முகசுந்தரம் | தவில் |
| வலையபட்டி A R சுப்ரமணியம் | தவில் |
| மதுரை S. சோமசுந்தரம் | பாடகர் |
| டாக்டர் சீர்காழி S. கோவிந்தராசன் | ,, |
| M L. வசந்தகுமாரி | ,, |
| டாக்டர் M. பாலமுரளிகிருஷ்ணா | ,, |
| சிட்டிபாபு | வீணை |
| K. P. சிவானந்தம் | ,, |
| N. ரமணி | புல்லாங்குழல் |
| லால்குடி ஜெயராமன் | பிடில் |
| எ. கோவிந்தசாமி நாயக்கர் | ,, |
| C. S. முருகபூபதி | மிருதங்கம் |
| மதராஸ் ஏ கண்ணன் | ,, |
| உமையாள்புரம் சிவராமன் | ,, |
| வைஜயந்தி மாலா பாலி | நடனம் |
| செல்வி அலர்மேல்வள்ளி | ,, |

கடந்த ஜூலை 84 மாதம் மேலும் 9 கலைஞர்களை தமிழக அரசு அரசவைக்கலைஞர்களாக நியமித்துள்ளது. இவர்களுக்கும் 3 வருடம் வரை மாதம் ரூ. 1000 வழங்குவார்கள்.

| | |
|---|---|
| மகாராஜபுரம் சந்தானம் | பாடகர் |
| நெல்லை கணபதியா பிள்ளை | ,, |
| M. S கோபாலகிருஷ்ணன் | பிடில் |
| குன்னக்குடி வைத்யநாதன் | ,, |
| C. G. ரமேஷ், C. G. கணேஷ் | ,, |
| ப ஸ்ரீநிவாசு | மாண்டலின் |
| தஞ்சாவூர் உபேந்திரன் | மிருதங்கம் |
| பத்மா சுப்ரமணியம் | நடனம் |

தமிழக அரசவை பழைய கலைஞர்களுக்கும், புதிய கலைஞர்களுக்கும் இவர்களை ஆதரித்து தமிழக கலைகள் வளர்ச்சிக்கு தொண்டாற்றும் தமிழக அரசுக்கும் எமது வாழ்த்துக்கள்! இந்தியத் துணை கண்டத்திலேயே எந்த மாநிலமும்-ஏன்-மத்ய அரசும் செய்யாத சாதனையை தமிழக அரசு செய்துள்ளது. கிட்டத்தட்ட 30 அரசவைக் கலைஞர்களை எந்த அரசு வைத்துள்ளது? அவர்களில் பல கலைஞர்களுக்கு மாத மான்யம் உபரி வருமானமாக இருந்தாலும் சில கலைஞர்களுக்கு இன்று வாழ்க்கை நடத்த உதவியாக உள்ளது.

இதனை பாராட்டும் நேரத்தில் வயதான ஏழைக்கலைஞர்கள் உதவிப் பணம் PENSION பெறுவோர் பட்டியலை 1982-கு மேல் தமிழக அரசு கூட்டவில்லை என அறிந்து மிகவும் வருந்துகிறோம். 1982-83 – 1983-84 ஆண்டுகளில் விண்ணப்பம் செய்த ஏழைக் கலைஞர்களுக்கு இதுவரை உதவி கிடைக்கவில்லை. ஏற்கெனவே பெறுபவர்களில் சிலருக்கும் 3-வது வருட ஆய்வுக்காக நிறுத்தப்பட்டு பல மாதங்கள் ஆகி இருப்பதாக அறிகின்றோம்.

பிரபல கலைஞர்களை ஆதரிக்கும் அரசு இந்த ஏழைக் கலைஞர்களையும் விரைவில் கவனிக்கும் என நம்புகின்றோம்.

---

### தஞ்சை மாரியம்மன் கோவில் பல்லக்கு விழா

தஞ்சாவூர் அரண்மனையைச் சேர்ந்த மாரியம்மன் கோவிலில் 64வது ஆண்டு முத்துமணி அலங்கார விமானச் சிவிகை விழா தஞ்சை பல்லக்கு விழா குழுவினர் சார்பில் 12-8-84 அன்று நடைபெறஉள்ளது இதில் பிரபல நாதசுர தவில் கலைஞர்கள் பலர் கலந்து வாசிக்க உள்ளனர். இரவு T.L. மகாராசன் இன்னிசை நிகழ்ச்சியும் நடைபெற உள்ளது.

## ராஜா சர் முத்தையா செட்டியாருக்கு இரங்கல் கூட்டம் தமிழிசைச் சங்கம் நடத்தியது

சென்னை இராஜா அண்ணாமலை மன்றத்தில் 3-7-84 அன்று மறைந்த தமிழிசைக் காவலர் இராஜா சர் முத்தையா செட்டியாருக்கு தமிழிசைச்சங்கம் சார்பில் இரங்கல் கூட்டம் நடைபெற்றது உயர் நீதி மன்ற நடுவரும், தமிழிசைச் சங்க தலைவரும், இயல் இசை நாடக மன்ற தலைவரும் ஆன பி.ஆர். கோகுல கிருஷ்ணன் தலைமை வகித்தார். பேரவைத்தலைவர் ம. பொ. சிவஞானம். அமைச்சர் இராம வீரப்பன், மீ. ப சோமு, செம்மங்குடி சீனுவாச ஐயர் ஆகியோர் செட்டியாரின் தமிழ் மற்றும் தமிழிசைத்தொண்டுகள் பற்றி உரையாற்றினர். முன்னதாக வி. சோமசுந்தரம் தேவாரம் பாடினார். சீர்காழி கோவிந்தராஜன் இரங்கல் பாடல்களை பாடினார்.

கூட்டத்திற்கு மதுரை சோமு, மதராஸ் ஏ. கண்ணன், டி. வி. கோபாலகிருஷ்ணன், பித்துக்குளி முருகதாசு மற்றும் ஏராள இசை உலக அன்பர்கள், ரசிகர்கள் கலந்து கொண்டு ராஜாவுக்கு அஞ்சலி செலுத்தினர்.

மதராஸ் கண்ணன் மகள்

## செல்வி மகாலட்சுமி திருப்புகழிசை! பித்துக்குளி முருகதாசு பாராட்டு

தாம்பரம் இறைபணி மன்றத்தில் அருணகிரிநாதர் 20வது ஆண்டுவிழா 29-7-84 அன்று திரு பித்துக்குளிமுருகதாசு அவர்கள் தலைமையில் நடைபெற்றது. விழாவில் இண்டியன் பைன் ஆர்ட்ஸ் சொஸைட்டி செயலாளர் N. இராமச்சந்திரன், N. கிருட்டிணசாமி ரெட்டியார் கயப்பாக்கம் முத்துலிங்கா ரெட்டியார், வல்லக்கோட்டை முருகன் ஆலய தக்கார் ராசாராம், மற்றும் பல ஆன்றோர்கள் கலந்து கொண்டனர். தமிழிசைக்காவலர் ராஜாசர் முத்தையா செட்டியார் திருவுருவப் படத்தை இசைப்பேரறிஞர் மீ. ப. சோமு திறந்து வைத்தார்.

முன்னதாக இறைபணி மன்றத்தினர், மிருதங்க வித்வான் மதராஸ் A. கண்ணன் செல்வி K. மகாலட்சுமி V. சோமசுந்தரம், M. N. வெங்கடவரதன் ஆகியோர் தேவார, பிரபந்த திருப்புகழிசை வழங்கினர். செல்வி மகாலட்சுமி இசையை 'முருகா' அவர்கள் பாராட்டி ஆசி வழங்கினார். இரவு திருமதி/திரு. முருகதாசு திருப்புகழ் இன்னிசையுடன் விழா முடிவுற்றது. மன்றத்தலைவர் த. ஏகாம்பரம் விழா ஏற்பாடுகளை சிறப்பாகச் செய்திருந்தார்.



## விராலிமலை அருணகிரிநாதர் 34-ம் ஆண்டு விழா, இசை நிகழ்ச்சிகள்

7-8-84

மாலை 6 மணி : விழா துவக்கம் - வாழ்த்துரை
கே. வி. எஸ். கோபாலகிருஷ்ணன் IPS
(மாவட்ட காவல் துறை)
Lion எஸ். இராதாகிருஷ்ணன் செட்டியார் ஈரோடு
எஸ். வி. எஸ். வெங்கடாசலம்
(புதுக்கோட்டை திருக்கோவில்கள் தக்கார்)
வி. ஆர். ஏ. பாலகிருஷ்ணமுதலியார்,
(அங்கப்பா ஸ்பின்னிங் மில், மதுரை)
திருச்சி AKC நடராசன் - கிளாரினட்
யாழ்ப்பாணம் கே. கணேசபிள்ளை
திருப்புங்கூர் டி. ஜி. முத்துகுமாரசாமி தனித்தவில்கள்

10 மணி சிதம்பரம் எஸ மீனாட்சி சுந்தரம் குழுவினர் இன்னிசை
சென்னை டி கே.எஸ கலைவாணன்
டி. ஏ. எஸ். தக்கேசி குழுவினர் இன்னிசை

8-8-84

மாலை 6. தவத்திரு குன்றக்குடி அடிகளார் - சொற்பொழிவு
8. கரவடி ஷேக் சின்ன மவுலானா - நாதசுரம்
வலங்கைமான் ஏ. சண்முகசுந்தரம் தனித்தவில்
தென்சித்தூர் எஸ். என். சுந்தரம் ,,
மன்னார்குடி எம். ஆர். வாசுதேவன் ,,

10-30 : மதுரை S. சோமசுந்தரம் குழுவினர் இன்னிசை

9-8-84

மாலை 6 : வழக்காடு மன்றம்
7-30 : சி. ஜி. கணேஷ், குமரேஷ் இரு வயலின்கள்
10-30 : சூலமங்கலம் சகோதரிகள் இன்னிசை

அங்குவிலாஸ் அகிபர்

## M. V. M. செல்லமுத்துவின் கிடாரிசை நிகழ்ச்சி

இசைக்கலைஞர்களை ஆதரித்து வருபவர்கள் திண்டுக்கல் அங்குவிலாஸ் புகையிலை கம்பெனி உரிமையாளர்கள் மறைந்த முத்தையா அவர்களின் மகனார் M.V.M. செல்லமுத்து கர்நாடக இசையில் ஈடுபாடு கொண்டு கர்நாடக இசையை எலக்ட்ரிக் மாண்டலின் & கிடாரில் வாசித்து நிகழ்ச்சிகள் பல ஆண்டுகளாக நடத்திவருகின்றார் தற்பொழுது எலக்ட்ரிக் மாண்டலினில் ப சீனுவாசு என்ற சிறுவனும் பிரபலமாக கர்நாடக இசை நிகழ்ச்சிகளை நடத்தி வருகிறான்.

இவரது அரிய இந்த நிகழ்ச்சிகளை 19-8-84 அன்று கரூர் நாரத கான சபையில் ஏற்பாடு செய்துள்ளனர். வயலின், மிருதங்கம் போன்ற இசைக்கருவிகள் இவருக்கு துணையாக வாசிக்கின்றனர். வளர்க அவர் கலையார்வம்!

## அருள்மிகு தேவி கருமாரியம்மன் திருக்கோயில் திருவேற்காடு

**ஆடிப் பெரு விழா கலை நிகழ்ச்சிகள்**

| | | |
|---|---|---|
| 22-7-84 | | |
| காலை | வாரியார்தாசன் | சொற்பொழிவு |
| மாலை | சென்னை சகோதரிகள் கே. எஸ். சித்ரா கே. எஸ். அலமேலு | இன்னிசை |
| 29-7-84 | | |
| காலை | திருமதி சரசுவதி சீனுவாசன் | ,, |
| மாலை | டி. எம். எஸ். செல்வகுமார் | மெல்லிசை |
| 5-8-84 | | |
| காலை | வடபழநி என். ஆறுமுகம் | தேவாரம் |
| மாலை | சிதம்பரம் எஸ். மீனாட்சி சுந்தரம் | இன்னிசை |
| 12-8-84 | | |
| காலை | வேதாரண்யம் வேதய்யன் | தேவாரம் |
| | சங்கர்-கணேஷ் குழுவினர் | மெல்லிசை |
| 19-8-84 | | |
| காலை | கே. வீரமணி, சோமு ,, | ,, |
| மாலை | காஞ்சிபுரம் விநாயக முதலியார் | தேவாரம் |
| இரவு | காஞ்சிரங்கமணி-குழுவினர் | நாடகம் |
| 26-8-84 | | |
| இரவு | முத்துராஜா குழுவினர் | மெல்லிசை |

### திருவெற்றியூர் பட்டினத்தார் விழா

பட்டினத்தார் திருநட்சத்திர 27-வது ஆண்டுவிழா சென்னையை அடுத்த திருவொற்றியூரில் பட்டினத்தார் ஆலயத்தில் 10-8-84 அன்று முழுசும் நடைபெறுகின்றது. காலை தருமபுரம் P. சுவாமிநாதன் குழுவினர் தேவாரத்துடன் துவங்கும் விழாவில் தருமை ஆதினம் சுவாமிநாத தர்பிரான், நா.ரா. முருகவேள். M.N. சங்கர நாராயணன் ஜெயக்குமாரி பாஸ்கரன் அகியோர் கலந்து உரையாற்றுகின்றனர். மாலை திருமுருக கிருபானந்தவாரியார் சுவாமிகள் இசைச் சொற்பெழிவும் இரவு சீர்காழி S. கோவிந்தராசன் குழுவினர் இன்னிசை நிகழ்ச்சிகள் நடைபெற உள்ளது.

விழா எற்பாடுகளை மூர்அங்காடி ஓம் கங்கை விநாயகர் அருள் நெறித் திருக்கூட்டம் சார்பில் செயலாளர் N. K. தர்மலிங்கம் அவர்கள் செய்துள்ளார்.

## நாதக்கனலின் நாலாவது ஆண்டு இசை விழா

பாரதியார் பாடல்களை இசை நிகழ்ச்சிகளில் நிறைய பாட வேண்டும் என்ற நோக்கத்துடன் செயல்பட்டுவரும் அமைப்பு 'இசைக்கனல்' இதன் 4-வது ஆண்டு இசைவிழா 12. 8. 84 அன்று சென்னை ஆழ்வார்ப்பேட்டை. ஆத்திக சமாஜ மண்டபத்தில் காலை முதல் இரவுவரை நடைபெற உள்ளது. விழாவினை டாக்டர் S. இராமநாதன் தலைமையில் டாக்டர் M. பாலமுரளிகிருஷ்ணு துவக்கி வைக்கிருர்.

விழாவில் பாடகர்கள் டாக்டர் M. பாலமுரளிகிருஷ்ணு' துறையூர் ராஜகோபாலசர்மா, மருதக்குடி இராஜகோபால அய்யர், டாக்டர் எஸ. இராமநாதன், வயலின் கலைஞர் திருக்கோசர்ணம் இராமச்சந்திர அய்யர், மிருதங்கம் K. M. வைத்தியநாதன் இவர்களுக்கு 'நாதக்கனல்' என்ற பட்டம் வழங்கப்படுகின்றது. பல இசைக்கலைஞர்கள் கலந்த பாரதியார் பாடல்களைப் பாட உள்ளனர். விழா ஏற்பாடுகளை நாதக்கனல் நிறுவன தலைவர் பத்தமடை கிருஷ்ணன் செய்துள்ளார்.

## தமிழக அரசில் கலைத்துறை தோற்றம்

**ஔவை நடராசன் இயக்குநராக நியமனம்**

தமிழக அரசில் இதுவரை கலை சம்பந்தப்பட்ட அலுவல்களை கல்வித்துறையே கவனித்து வந்தது. இதனல் கலைத்துறையை அரசு சரிவர கவனிக்க முடியாது இருந்தது. தற்போதுள்ள தமிழக அரசு ஓர் தனித்துறையை ஏற்படுத்தி கலைத்துறை (CULTURAL DEPARTMENT) என்று பெயரிட்டுள்ளது. இதன் இயக்குநராக தமிழறிஞர் டாக்டர் ஔவை நடராசன் அவர்களை நியமித்துள்ளது.

இத்துறை இயலிசை நாடக மன்றம், இசைக்கல்லூரிகள், அரசவைக் கலைஞர்கள் அரசு கலை விழாக்கள், மற்றும் தமிழ்க் கலை பாதுகாப்பு, வளர்ச்சி கலைஞர்கள் நலம் முதலியவற்றை கவனிக்கும்.

கலைத்துறையினை தோற்றுவித்த தமிழக அரசுக்கு 'இயலிசை' கலைஞர்கள் சார்பில் நன்றி தெரிவித்துக் கொள்கின்றது.

**பம்பாய் நடன ஆசிரியர்**

## 'கலைமாமணி' A.T. கோவிந்தராச பிள்ளை மறைவு

பம்பாயில் மாதுங்காவில் கடந்த 30 ஆண்டுகளாக சிறப்புடன் நடைபெற்று வரும் நடனபள்ளி ஸ்ரீஇராஜ இராஜேசுவரி பரத நாட்டிய கலாமந்திர், இதனை நிறுவி இசன் முதல்வராக விளங்கியவர் தஞ்சை மாவட்ட நடன ஆசிரியர் அய்யம்பேட்டை டி. கோவிந்தராச பிள்ளையாவார். இவர் மறைந்த நடன மேதை திருவிடைமருதூர் குப்பையா பிள்ளையின் மருமகனுவார். இவர் கடந்த 9-2-84 அன்று பம்பாயில் தனது 61வது வயதில் காலமானார். இவருக்கு பம்பாயிலும் சென்னையிலும் ஏராள மாணவிகள் உண்டு. இவரது இறுதி ஊர்வலத்தில் ஏராள மாணவிகள், பம்பாய் கலைஉலக பிரமுகர்கள். தமிழர்கள் கலந்து கொண்டனர்.

இவரது பள்ளியில்தான் பிரபல நடன ஆசிரியர்களும் இவரது மைத்துனர்களும் ஆன 'கலைமாமணி' டி. கே. மகாலிங்கம் பிள்ளை, டி. கே. கல்யாண சுந்தரம் பிள்ளை ஆகியோர் நடன ஆசிரியர்களாக உள்ளனர். மறைந்த கோவிந்தராச பிள்ளைக்கு 2 மகன்களும், 5 மகளகளும் உள்ளன. அனைவரும் திருமணமானவர்கள் மகன் Y. வசந்தகுமாரும் நடன ஆசிரியராக உள்ளார். அவரது பிரிவால் வாடும் அவரது மனைவியாருக்கும், உறவினர்களுக்கும் 'இயலிசை' யின் ஆழ்ந்த அனுதாபங்கள்.

### சென்னை மாவட்ட இசை வேளாளர் சங்கம் (பதிவு)

இச்சங்கத்தின் சார்பில் நடைபெறும் முத்தமிழ்ப் பேரவைக் கலை விழாவின் 1985 ஜனவரியில் நடத்த உள்ளோம். சங்கத்தின் புது விலாசம்:

78, ராமகிருஷ்ண மடம் சாலை
மந்தவெளி, சென்னை-28

சங்கம், கலை விழா பற்றி புது விலாசத்திற்கு தொடர்பு கொள்ளவும்.

**திருவாரூர் T. S. லட்சப்பா பிள்ளை** தலைவர்
**சிதம்பரம் S. மீனாட்சிசுந்தரம்** செயலாளர்

### அருள்மிகு நவசக்தி விநாயகர் திருக்கோவில் லஸ், மயிலை, சென்னை-4

**விநாயகர் சதுர்த்தி கலைவிழா நிகழ்ச்சிகள்**

| | | |
|---|---|---|
| 29-8-84- | | |
| இரவு 9 | எஸ். சிவராமகிருஷ்ணன் குழுவினர் | இன்னிசை |
| 30-8-84 | | |
| இரவு 7 | Prof. ஜே. வி. சுப்பிரமணியன் | மாயாஜாலம் |
| 9 | கே. வீரமணி, ராதா குழுவினர் | மெல்லிசை |
| 31-8-84 | டி. கே கலா | ,, |
| இரவு | | |
| 1-9-84 | குடந்தை கணநாதர் சபை | பொம்மலாட்டம் |
| 2-9-84 | டி. ஈ. பழனிச்சாமி குழுவினர் | நாதசுரம் |

திருத்தணியில்

**ஆடிக்கிருத்திகை**

## கலை நிகழ்ச்சிகள்

திருத்தணிகை அருள்மிகு சுப்ரமணியசுவாமி திருக்கோவிலில் ஆடிக்கிருத்திகை தெப்ப உற்சவ விழா ஜுலை 23, 24, 25 தேதிகளில் நடைபெற்றது. லட்சக் கணக்கான பக்தர்கள் கலந்து கொண்டனர்; காவடி செலுத்தினர். தினசரி நடைபெற்ற இசை நிகழ்ச்சிகளில் ஷேக் சின்ன மவுலான நாதசுரம், V.கோவிந்தசாமி நாயக்கர், வி. சுரேஷ் இரு வயலின், T L மகாராசன் இன்னிசை ஆகியவை நடைபெற்றன.

---

மகாபலிபுரம் அடுத்த திருப்போரூரில் ஆடிக்கிருத்திகை விழாவில் மதுரை சோமசுந்தரம், காஞ்சிபுரம் விநாயக முதலியார், ஆகியோர் இசை நிகழ்ச்சிகள் நடத்தினர்.

### கடிதங்கள்

தங்கள் 1-7-84 இயலிசை இதழில் திருக்கோயில்களில் மரபு வழி இசையை வைக்காமல் மேல் நாட்டு கருவிகளுடன் பாப் இசை நடத்தப்படுவதைக் கண்டனம் செய்து தாங்கள் எழுதி இருக்கும் தலையங்கம் தற்போது அறிவுறுத்தப்படவேண்டிய ஒன்ருகும்.

T.K.S. கலைவாணன், B.Sc
இசைக்கலைஞர் சென்னை 86

**கதையல்ல, காவியம்!**

'ஆடலரசி அபிராமி' கலைத் தொடர்கதையில் நாயகன் சுவாமிநாதன் வந்தபின் கதைப்போக்கே மாறியுள்ளது. இசைக்கலை அறியாத என்போன்றவர்களுக்கும் கதை படிக்கும் ஆர்வத்தைத் தூண்டுகின்றது. இதுகதையல்ல; காவியம்.

P. இராமகிருஷ்ணன்
திருவனந்தபுரம்

ந. இராமநாதன்,
18, 4 வது பிரதான சாலை
R.A. புரம்
சென்னை 28

TN/MS(S)/260
'IYALLISAI' Musical Bi-Monthly Printed by T. Thitunavukarasu at Jayalakshmi Art Printers Kavarai Street. Vadapalani Madras-26. Published / Edite' by M. Lakshmi, 57. South Sivan Koil Street, Kodambakkam MADRAS-600 024.

கலைத்தொடர்கதை

# ஆடலரசி அபிராமி

## 16. அபிராமி அந்தாதி

கலைத்துறையில் முன்னுக்கு வர துடித்துக் கொண்டிருக்கும் யாரும் திடீரென்று வேறு ஒருவருக்கு முன்னேற்றம்-புகழ வரும் பொழுது அவர்களைப் பற்றி தெரிந்து கொள்ள, தீவிரமாக சிந்திக்க துவங்குவது இயல்பு. அதுவே பொருமையாகவும் சிலருக்கு மாறலாம். சிலர் விரக்தியடையலாம். சிலர் பெருமையாக எடுத்துக் கொண்டு தானும் வர வேண்டும் என கடினமாக உழைக்கலாம். நமது கதாநாயகன் சுவாமிநாதன் கடைசி ரகத்தைச் சார்ந்தவன். இவ்வளவு சிறு வயதில் அபிராமி பூரணமாகக் கலையைக் கற்று கொண்டு எப்படி புகழ்பெற்றுளோ என வியந்தான்,

திருவையாறு இராசகோபால் பாகவதர் கலைக்கூடத்தில் பாடம் கேட்டுக்கொண்டிருந்த அவனுக்கு பஞ்சாட்சர பாகவதர் வந்து அபிராமி பற்றி சொன்னவுடன் அங்கு இருப்பு கொள்ளவில்லை. உடனே அவருடன் தஞ்சாவூர் கிளம்பினான் அவர் வாயைக்கிளறி அபிராமியை பற்றி மேலும் தெரிந்து கொள்ள விரும்பினான்.

இருவரும் தஞ்சை செல்லும் பெரிய சாலைக்கு வந்து தஞ்சாவூர் செல்லும் குதிரை அல்லது மாட்டு வண்டிகள் வருகின்றதா என்று பார்த்தனர். அக் காலத்தில பஸ வசதி கிடையாது. குதிரை வண்டிகள் ஏராளமாக இருக்கும். விரைவாகவும் செல்லும். பாகவதருக்கு தெரிந்த இரட்டைமாட்டு வண்டிகாரன் ஒருவன் வந்தான். அவருக்கு வணக்கம் தெரிவித்துவிட்டு இருவரையும் தனது வண்டியில் ஏற்றிக்கொண்டான் தஞ்சாவூரிலிருந்து பாரம் ஏற்றிக்கொண்டு வந்து தஞ்சாவூர் திரும்பும் வண்டியானதால் வண்டி காலியாக இருந்தது. பாகவதர் அழகாக தனதுபைகளை வைத்துக்கொண்டு வெற்றிலை சீவல் போட ஆரம்பித்து விட்டார் சுவாமிநாதன் பேச்சைத் துவக்கினான்.

'சிம்மநந்தனம் சதுராடினுர்களே..... அவங்க எந்த ஊரு' என்று தயக்கத்துடன் கேட்டான்.

பஞ்சாட்சர பாகவதர் வண்டியை நிறுத்தி தாம்பூல எச்சிலைத் துப்பிவிட்டு அங்கு ஓடிக் கொண்டிருந்த வாய்க்காலில் வாயைக் கொப்பளித்து தண்ணீர் அருந்தி விட்டு மீண்டும்வண்டியில் ஏறினார்

''தம்பி என்ன கேட்டது'' என்று கேட்டார்.

சுவாமிநாதனுக்கு இவரது பத்தாக்கள் பிடிக்கவில்லை. என்றுலும் மிக அடக்கமாக 'சிம்மநந்தனம் சதுர் ஆடின அபிராமசுந்தரி பற்றி கேட்டேன்,'என்று தேரிடையாகக் கேட்டான்.

'அந்த அபிராமிகுட்டியைப் பற்றி கேட்கறியா தம்பி அவ வேறு யாருமில்லை. பந்தனைநல்லூர் பங்கஜம் மகதான்,

'அவங்க யாரு'

அந்த காலத்தில் நல்லசதுர்க் கச்சேரி செய்து அடக்கமா வாழ்ந்தவங்க அந்த அம்மா என் உன் தகப்பனருக்கு நல்லா தெரியும். பங்கஜ உன் தகப்பனைசுந்தரம் அண்ணான்னு அன்புடன் கூப்பிடுவார்கள். பந்தனைநல்லூர் பக்கம் அவர் வாசிக்க சென்ருல் ஒரு வேளையாவது சாப்பிட்டு செல்ல சொல்வாங்க. ஆனுல் அபிராமி அப்படியில்லை...''

'ஏன் அபிராமி எப்படி?''

'அம்மாவைவிட பத்து மடங்கு அழகுடன் பிறந்து விட்டாள். ஆடல்கலை கூடவே வந்து விட்டது எல்லாவற்றையும்விட கர்வமும் சேர்ந்து கொண்டது'

அபிராமி கர்வம் உடையவள் என்று கேட்கவே சுவாமிநாதனுக்கு பிடிக்கவில்லை. கர்வம் அவனது பரம்பரைக்கே பிடிக்காதது. மிகப்பெரிய இசை மேதைகளாக விற்பன்னர்களாக வாழ்ந்த அவனது மூதாதையர் உறவினர்கள் அனைவரும் மிக அடக்கத்துடன் வாழ்ந்தவர்கள் என்ருலும் அபிராமி கர்வம் பற்றி ஏதும் கூருது மௌனமாக இருந்தான. பஞ்சாட்சரம் தொடர்ந்தார்.

''ஊம்... அவளுக்கிருக்கும் செல்வாக்கு இருந்தால நமக்கும் கர்வம் வந்து விடும். அவளைப் பார்ப்பதற்கே கூட்டம் கூடும். ஆட ஆரம்பித்தால் ஜனங்க தங்களை மறந்திடுவாங்க.எந்தனையோ மைனர் பசங்க அவளைப் பார்த்து பெருமூச்சுவிடுகிருன். அவ எவனையும் மதிப்பதில்லை.

'அவங்க குருநாதர் யாரு'

'குத்தாலம் கணபதி பிள்ளை தான் தம்பி. அவரு ஜதி சொல்ல கேட்கணும், அவர் சொல்ற ஜதிக்கு தாளம் போடவே பலர் தடுமாறுவாங்க அவ்வளவு கடினமா இருக்கும். ஆனுல் அபிராமி ஆடுவதைப்பார்த்தால சுலபமா தெரியும்'

சுவாமிநாதனுக்கு 'தாளம் போடவே பலர் தடுமாறுவாங்க' என்ற வார்த்தைகள் பலமாக வேலை செய்தன. 'அப்படி என்ன கடினமா சொல்வாரு' தாளத்தை கொஞ்சம் அழுத்திப் போட்டால் நிற்காதா' என்று கேட்டான்.

'தம்பி, நீ சதுர் கச்சேரிக்கு போயிருக்கியா' என்று கேட்டார் பஞ்சாட்சரம்.

'அப்பா அதற்கெல்லாம் அனுப்புவதில்லை...' என்று இழுத்தான் சுவாமிநாதன்.

'அதிலும் நியாயம் இருக்கிறது. இருந்தாலும் சதுர்க் கச்சேரியிலே இருக்கும் தாளக் கட்டுப்பாடு. அதனை நட்டுவனுர்கள் கையாளும் விதம் இவற்றை அவசியம் பார்த்து தெரிந்துகொள்ள வேண்டும். சதுர் கச்சேரியில் தாளம் போட்டால் நமது லய ஞானம் வளரும். அதிலும் வர்ணம் என்ற ஆட்டத்தில் வரும் ஜதிகளை ஆடும்பொழுது நமது கைத்தாளம் பிய்க்கும் அவசியம் தம்பி குத்தாலம் கணபதிபிள்ளை நட்டுவாங்கத்தைப் பார்க்கணும்' என்ருர் பஞ்சாட்சரம்.

'அவங்க தஞ்சாவூர் பக்கம் எப்ப ஆட வருவாங்க' என்று ஆவலுடன் கேட்டான் சுவாமிநாதன்.

'புதுக்கோட்டை இளையராஜா வைத்தான் கேட்கவேணும்; கலா ரசிகரான அவருக்குத்தான் அபிராமி சதுர் கச்சேரிகள் தேதிகள் விவரம் தெரியும்,

இந்த பதிலைக்கேட்டு, சுவாமிநாதனுக்கு ஒன்றுமே விளங்கவில்லை எதார்த்தவாதியான அவன்,'அவர்தான் அவங்களுக்கு ஆதரவு கொடுக்கின்றவரா'என்று கேட்டான். அக்காலத்தில் கலைஞர்களைராஜாக்களும் ஜமீன்களும் ஆதரிப்பது வழக்கம். அந்த வகையில் தான் இளையராஜா அபிராமிக்கு ஆதரவு தருகின்ருர் என அவன் நினைத்தான்

சிறுவனுன அவன் மனதில் மேலும் வெளிப்படையாகப் பேசி குழப்பக்கூடாது என எண்ணினுர் பஞ்சாட்சரம். சுந்தரம் பிள்ளை பயம் வேறு, எனவே 'ஆமாம்' என்று சொல்லிவிட்டு மீண்டும் தாம்பூலம் போட ஆரம்பித்தார்.

நல்ல வெயில் ஏறிவிட்டதால் வண்டியை நிறுத்தி மாடுகளை அவிழ்த்து வாய்க்காலுக்கு தண்ணீர் காட்ட அழைத்து சென்ருன் வண்டி ஓட்டி. சுவாமிநாதனும் பஞ்சாட்சர பாகவதரும் ஓர் விட்டுத் திண்ணையில் உட்கார்ந்தனர். அப்பொழுது அவர்கள் சற்றும் எதிர்பாராவாறு உள்ளிருந்து ஒரு பெரியவர் வெளிவந்து அவர்களுக்கு வணக்கம் செய்தார்.

'உள்ளே வந்து தாக சாந்தி செய்து கொள்ளலாமே' என்று மிகவும் பழக்கப்பட்டவர் போல் பேசினுர். பஞ்சாட்சர பாகவதர், அவர் தனது நிகழ்ச்சிக்கு எங்கேனும் வந்த ரசிகராகத்தான் இருக்கவேண்டும் என்று எண்ணி பெருமிதத்துடன் சுவாமிநாதனைப் பார்த்து, 'தம்பி... நம்ம வீடுதான் வா உள்ளே' என்று சொல்லி அவனையும் அழைத்து சென்ருர். சுவாமிநாதனும் பாகவதருக்கு வேண்டியவர்கள் என எண்ணி அவர் பின்னே அடக்கமாகச் சென்ருன்.

அழைத்த பெரியவர் இருவருக்கும் குவளையில் தண்ணீர்கொண்டு வந்து கொடுத்தார். இருவரும் கை, கால் கழுவி வருவதற்குள் இரண்டு மனைகளைப்போட்டு இலை போட்டு வைத்திருந்தனர். பஞ்சாட்சர பாகவதருக்கு நல்ல உச்சி வேளையில் சாப்பாட்டைக் கண்டதும் உச்சி குளிந்து விட்டது. மேலும் கர்வத்துடன் சுவாமிநாதனைப்பார்த்தார் 'பார்த்தாயா எனது செல்வாக்கை' என்று சொல்லியது அந்தப்பார்வை.

சாப்பாடும் ஆனதும் தஞ்சாவூர் மாவட்டத்திற்கே உரிய மரியாதையானவெற்றிலை சீவல்தாம்பாளம் வந்தது. அதனையும் விடுவாரா பாகதவர். சுவாமிநாதன் இரண்டு சீவல் மட்டும் மரியாதைக்கு எடுத்து போட்டுக்கொண்டான்.

பெரியவர் வந்து அவர்களுடன் அமர்ந்து கொண்டார் தனது குடும்பத்தார் அனைவரையும் அழைத்து சுவாமிநாதனைக் காட்டி 'இந்த தம்பி எனது நண்பர் தஞ்சாவூர் சுந்தரம் பிள்ளை மகன் சுவாமிநாதன். அற்புதமாக பாடும். ஒருமுறை வாண்டையார் வீட்டில் பாட்டு கேட்டேன். வீட்டிற்கு அழைக்கவேண்டும் என்றுவிரும்பினேன். இன்று எதிர்பாராதவிதமாக தம்பியே வந்துவிட்டது நமது பாக்யம்தான்' என்ருர்.

பஞ்சாட்சர பாகவதருக்கு குப்பென்று வியர்த்துவிட்டது. இவ்வளவு மரியாதையும் சுவாமிநாதனுக்குத்தான என்று எண்ணி மனதிற்குள் குமுறினுர் என்ருலும் வெளியே காட்டிக்கொள்ளவில்லை, உடனே வெளியே சென்று வெற்றிலைசீவலை துப்பிவிட்டு சுத்தமாக வாய் கொப்பளித்து விட்டு வந்தார். சுவாமிநாதன் நிலைமையைப் புரிந்து கொண்டு மனத்திற்குள் சிரித்துக்கொண்டான், இருந்தாலும் பெரியவர்கள் எதிரில் அடக்கமாக நடந்து கொள்ள வேண்டும் என்ற அவனது தந்தை மத்திரத்தை மறந்தானில்லை.

'தம்பி .. ஒரு பாட்டுபாடுங்க, என்று வீட்டுப்பெரியவர் கேட்டார் அவரது குடும்பத்தார் அனைவரும் வந்து அவனது பாட்டைக்கேட்க ஆவலுடன் நின்றனர் சுவாமிநாதனும் பாடவிரும்பினுன். எனினும் உடனே பாடவில்லை. பாகவதர் முகத்தைப்பார்த்தான்.

'என்ன தம்பி, அப்பா ஏதேனும் சொல்வார் என்று பயப்படாதே. நான் இருக்கிறேன் பாடு' என்ருர் அவர் அவரது உத்தரவில் பாட ஆரம்பித்தான் அவன். பஞ்சாட்சர பாகவதருக்கு சுவாமிநாதன் செய்கை பெருமிதம் அளித்தது அவரையும் அறியாமல் அவர் மனம் அவனை வாழ்த்தியது. அபிராமியைப் புகழ்ந்து அந்தாதி பாடிக்கொண்டிருந்தான்.

(தொடரும்)

---

## வருந்துகிறேம்!

தமிழக அரசு இயலிசை நாடக மன்ற செயலாளர் திரு D.V. நாராயணசாமி அவர்களின் இரண்டாவது குமாரர் முத்து மாணிக்கம் அவர்களின் அகால மரணம் அறிந்து மிகவும் வருத்த முற்ரேம். அவருக்கு 'இயலிசை' சார்பில் ஆழ்ந்த அநுதாபங்களைத் தெரிவித்துக் கொள்கிரேம.

—ஆசிரியர்